வேண்டும். இல்லாவிடில் நாளொன்றுக்கு எட்டு, ஏழு, ஐந்து, நான்கு, இரண்டு அல்லது ஒரே அத்தியாயத்தையாவது (83) பத்து, ஒன்று, அல்லது அரை சுலோகத்தையாவது தன தபீஷ்டமான பயனைக் கொடுத்தருளனுற்ற ஸ்ரீகந்தபிரானுடைய திருவருளை நாடியவனாகி யாதரவுடன் கேட்கவேண்டும்.(84) ஒவ்வோரு காண்டத்தின் முடிவுதினத்திலும் நல்ல சிவபக்தர்களாகிய, ஆயிரத்தெட்டு, அல்லது நூற்றெட்டு, ஐம்பது, இருபத்தினான்கு, அல்லது பனிரண்டுப் பிராம்மணர்களுக்காவது ஸ்ரீமகேசுவரனுடைய, திருப்திக்காகப் போசனமளித்தல்வேண்டும்.(85-6) மேலும் ஸ்ரீசிவபிரானுடைய திருக்கலியாண சமயத்திலும, ஸ்ரீகந்தபிரானுடைய பட்டாபிஷேகம், இருதேவிமார்களின் திருக்கலியாணம் இச்சமயங்களிலும்,(87) ஒவ்வொரு காண்டத்தின் முடிவுகாலத்திலும் புராண முரைப்போரை வத்திரங்களாலும், மோதிரம்முதலிய பூஷணங்களாலும், கேயூரம் முதலியவைகளாலும் தக்ஷிணைகளோடு பூஜிக்கவேண்டும்.(88) தவிரவும் நல்லபுத்தியை யுடையோன் புராணம் முற்றும் முடிவாகும் சமயத்தி லிவ்வாறாய்ப் பூஜித்துவிட்டுத் தான் கோரிய பயன் கைகூடுவதற்காக ஸ்ரீவடிவேலன் திருவருளை யடையும்படி மகா ஸம்பிரமங்களோடு விஸ்தாரமாய்ப் பிராம்மணர்களுக்குப் போஜனமளித்தல் வேண்டும்.(89½) மேலும் புராணமுரைக்கும் வித்துவானையும் வேண்டியவைகளால் மிருதியாய்ச்சம்மானித்துவிட்டுப் பின்னும் ஸ்ரீஜகதீசனது திருப்திக்காக வப் புராணீகருக்கு மிகுந்த தனங்களாலும், பசுக்கள், குதிரை, யானை, ரதம்முதலிய வாகனங்களாலும், கிராமம், பூமி, வீடுமுதலிய மற்றவைகளாலும் திருப்திசெய்யவேண்டும்.(91) ஓ, முனிவர்களே, லோபத்தினாலாவது மோகத்தினாலாவது பயத்தினாலாவது இவைகளையெல்லாம் செய்யாவிடில் ஸ்ரீஸ்வாமிநாதரு மவனுக் கெல்லாப் பயன்களையும் கொடுத்தருளமாட்டார்.(92) பிற்பாடு நல்ல புத்திசாலியானவன் புராணீகனை வாகனத்தின்மீ தேற்றி மங்களவாத்தியங்களுடனும் சங்கீதங்களுடனு மூர்கோலம்செய் தவனை யவர் விடுதியிற் சேர்ப்பித்தல் வேண்டும்.(93) இங்ஙனம் செய்திடில் வடிவேலனும் சகலபயன்களையும் கொடுக்கலாவார். இவ்விதமா யிப் புராணத்தி னொருசுலோகத்தையாவது அல்லது அரைசுலோகத்தையாவது கேட்டிடினும்(94) நான்கு வேதங்களையு மாறங்கங்களுடனும் பதக்கிரமங்களுடனு முலகினில் சிரத்தையுடன் கோடிமுறை ஜபித்தா லென்ன பயனோ(95) அதின் கோடிமடங்கானபயனை யச்சிரத்தையுடையோன் பெறலாகின்றான். மேலு மவனுக்கு நூறசுவமேத யாகங்களுக்கும் (96) ஷோடச மகாதானங்களுக்குமுள்ள பயனிலும் கோடிமடங்கு சித்திக்கலாகுமே! பின்னு மவ னிகத்தில் புத்திர மித்திர களத்திரம் முதலியவர்களுட னனேக போகங்களை யனுபவித்துப்போட்டுப் பரத்திலும் ஸ்ரீகந்தபிரானுடைய ஸாயுஜியபதவியை யடையலாவான்.(97½) புத்திரனை வேண்டுவோன் புத்திரர்களையும், தனத்தை வேண்டுவோன் மிகுந்த வைசுவரியங்களையு ம

டைந்து(98) முடிவினில் மானிடர்கள் ஸ்ரீசிவபெருமானுடைய ஸாயுஜ்யபதவியாகிய மோக்ஷஸாம்பிராஜியத்தை யடையலாகின்றார்கள். ஆகையால் நன்மையின் விருத்திக்காக வென்றும் நாள்தோறுமிச் சரித்திரத்தைக் கேட்கவேண்டு மென்றார்.(99) பிறகு சூதமுனிவரி னிவ்வாறு வசனங்களால் மாமுனிவர்கள் சந்தோஷக்கடலின் மிகுந்த அலைகளி லாழ்ந்தனுற்ற சித்தத்தைக் கொண்டவர்களாகிச் சூதனை யப்போது பூஜித்துப் பிற கவனைவிட்டுத் தம் தம்முடைய வாசிரமத்திற்கு வெகு சந்தோடத்துடன் சென்றார்கள்.

உபதேசகாண்டம் தொண்ணூற்றேராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

சிவரகசிக்ண்டம்.



# அட்டவணை.

## வீரமாகேந்திரகாண்டம்.



## உயுத்தகாண்டம்.

# அறிவிப்பு.

இப்புத்தகத்தின் 159-160-வது பக்கங்களை விலக்கியும், 277-வது பக்கத்தி னடக்கத்தை 278-லும் 278-ம் பக்கத்தி னடக்கத்தை 277-லுமாய் மாற்றியும் படிக்கவேண்டும்.

